[2nd April 1958

*Neera*

* 552 *Q*.—SRI V. S. MANICKASUNDARAM (on behalf of Sri P. G. Manickam) : Will the Hon. the Minister for Home be pleased to state—

(*a*) the number of ex-tappers who have been granted permits to tap the coconut and palmyrah trees for neera in 1957; and

(*b*) the value of palm-gur produced by tapping neera?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : (*a*) Sixty-four thousand one hundred and forty-five ex-tapper members of Co-operative Societies were issued licences to tap palmyrah trees and 7,319 to tap coconut trees for neera during the year 1957; and

(*b*) Rs. 1,04,20,940.

SRI K. VINAYAKAM : May I know whether the Government dropped the idea of opening a Neera Parlour adjacent to the Assembly which was found useful during the summer of last year?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : I do not know when the Government had this proposal under consideration.

SRI A. VEDARATHNAM : பதனிக்காக கொடுக்கப்படும் லைசென்ஸ்களெல்லாம் துர்விநியோகம் செய்யப்படாமல் நல்ல முறையில் நடக்கிறது என்று அரசாங்கம் கூற முடியுமா ? அப்படியில்லையானால் இதற்காக லைசென்ஸ் வழங்கும் திட்டத்தை கைவிட அரசாங்கம் முன்வருமா ?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : அவ்வாறு துர்விநியோகம் செய்யப்படவில்லை என்று நான் கூற முடியாது. எனக்கு அது பற்றி கவலைதான் ஏற்படுகிறது. இருந்தாலும் பல பேர்களுக்கு இதனால் வேலை கிடைக்கிறது. வெல்லமாகவும், நீராவாகவும் கூட விநியோகப்படுகிறது. ஆனால் இப்பொழுது நான் ஒன்றை மைசூரில் உள்ள ‘ செண்டிரல் புட் ரிஸெர்ச் இன்ஸ்டிடியூட்டில் ’ பரிசீலனை செய்ய பார்க்கிறேன். இந்த நீராவை மறுபடியும் கள்ளாக மாற்றவிடாமல் ஒரு ‘ பிரிஸர்வேடிவ் ’ கிடைக்குமானால் அதை போட்டு கிராமங்களில் சோடா மாதிரி விற்பதற்கு ஏற்பாடு செய்யலாம். இன்னும் அதிகமான பேர்களுக்கும் வேலை கிடைக்கும். துர்விநியோகம் ஆகாது. அதுபற்றி ஆராய்ச்சி செய்யச் சொல்லுகிறேன்.

SRI K. B. S. MANI : நீராவிற்கு தற்சமயம் சர்க்கார் பெர்மிட் வழங்கும் காரணத்தினால் ஒரு படிக்கு, வெல்லமாக காய்ச்சினால் 12 அணாவும் அல்லது நீராவாக விற்றால் 14 அணாவும் அல்லது கள்ளாக விற்றால் இரண்டு ரூபாயும் கிடைக்கிறது. ஆகவே, பெர்மிட் வைத்திருப்பவர்கள் லாபகரமாக இருக்கும் தொழிலை செய்ய முன்வருவார்கள். ஆகையால் உடனடியாக இதற்கு நல்லதோர் தடையை விதிக்க அரசாங்கம் ஏற்பாடு செய்யுமா ?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : கனம் அங்கத்தினர் அவர்கள் சீர்காழி தாலூகாவைச் சேர்ந்தவர்கள். சீர்காழியில் இருப்பவர்கள் அப்பட்டமாகச் சொல்லிவிட்டார்கள். வெல்லத்தில் கூட எங்களுக்கு அக்கரையில்லை, நாங்கள் நீராவாக விற்கிறோம் என்று. நீராவாக விற்க முடியாது என்பது அரசாங்கத்திற்கு தெரியும். அதனால் தங்களுக்கு லைசென்ஸ் கொடுக்கவேண்டுமென்று சிலர் வற்புறுத்திக்கொண்டிருந்தாலும், அரசாங்கம் இதுவரையில் அவ்வாறு கொடுப்பதற்கு சம்மதிக்கவில்லை.